# அருள் ஒளி

சிவராத்திரி சிறப்பு மலர்




வெளியீடு
ஸ்ரீ துர்க்காதேவி தேவஸ்தானம்
தெல்லிப்பழை
இலங்கை
2008



## பன்னாலை - தெல்லிப்பழை சிவனடியார் தொண்டர் மடாலய நூதன பிம்ப பிரதிஷ்ட மகா கும்பாபியேஷகம் 28.01.2008 திங்கட்கிழமை நடைபெற்றது









உ

# அருள் ஒளி

(மாதாந்த சஞ்சிகை)

ஆசிரியர்:
செஞ்சொற்செல்வர்
திரு. ஆறு. திருமுருகன் அவர்கள்

உதவி ஆசிரியர்:
சைவத்திரு கா. சிவபாலன் அவர்கள்

2008 சர்வசித் வருடம் மாசி

மலர் 62

வெளியீடு: ஸ்ரீ துர்க்காதேவி தேவஸ்தானம்
தெல்லிப்பழை, இலங்கை. ...இல. QD/74 NEWS/2006Y



## யாழ்ப்பாண பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்தத்துறையில் முதுகலைமாணி

வெள்ளிவிழாவைக் கண்ட யாழ் பல்கலைக்கழகத்தில் இவ்வருடம் சைவசித்தாந்தத் துறையில் முதுகலைமாணி பட்டப்படிப்பு ஆரம்பிக்கப்பட்டுள்ளமை மகிழ்ச்சி தரும் செய்தியாகும். ஆற்றலும், ஆர்வமும் மிக்க ஐம்பது பேர் இத்துறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு பட்டப்படிப்பைத் தொடர்வது பாராட்டுக்குரிய விடயமாகும். யாழ். பல்கலைக்கழகம் ஆரம்பித்தநாள் முதல் சைவசித்தாந்தத்துறை உருவாக்கப்படவேண்டும் எனக் குரல் கொடுத்தவர்கள் பலர். பரமேஸ்வராக்கல்லூரியின் புகழ்பூத்த அதிபராக விளங்கிய அறிஞர் அமரர் பண்டிதர் மு. ஞானப்பிரகாசம் அவர்கள் சைவசித்தாந்தம் தனிப்பீடமாக அமையவேண்டும் எனப் பலமுறை எடுத்துரைத்தமை யாவரும் அறிவர். ஈழத்தில் சைவசித்தாந்த பயிர் வளர்த்த நல்லை நகர் ஆறுமுக நாவலர் பெருமான், காசிவாசி செந்திநாதஐயா, சைவப்பெரியார் சு. சிவபாதசுந்தரம், பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை போன்றோர் ஆத்மாவுக்கு இக் கைங்கரியம் பெரும் அர்ப்பணிப்பாகியுள்ளது. தெல்லிப்பழை துர்க்கை அம்மன் ஆலய முன்றிலில் சென்னை சைவசித்தாந்த சமாசம் சைவசித்தாந்த பவளவிழா மாநாட்டை 1981ஆம் ஆண்டு நடாத்தி ஈழத்துச் சைவசித்தாந்த வரலாற்றை சிறப்பித்தமை இவ்வேளை நினைவு கூரத்தக்கது. மெய்யியல் தத்துவப்பிரிவிலும் இந்து நாகரிகத் துறையிலும் சைவசித்தாந்தத் தத்துவம் ஒரு பகுதியாகக் கற்பிக்கப்பட்டு வருகின்றது. தற்போது சைவசித்தாந்தமும் தமிழும் முதுகலைமாணிப் பட்டத்திற்குரிய புதிய அணி உருவாக்கப்பட்டமை அறிந்து யாழ். பல்கலைக்கழகத்தைப் பலரும் பாராட்டி வருகின்றார்கள். எங்கள் நாட்டில், அரசியல், கல்வி, சமயம், கலை, பண்பாடு அனைத்திலும் உண்மையற்ற தன்மையும் வளர்ந்து கொண்டு போவது கண்கூடு

வையகத்தில் உயிர்கள் மிகவாடக் கண்டேன்
வழியறியா தவைமயங்கி வருந்தக் கண்டேன்
மெய்யிதென் றுய்வுநெறி காட்டி நன்மை
வினை விப்பார் எவரையுமே கண்ணிற் காணேன்

என்ற நிலையில் நாம் வாழும் சூழல் வழிகாட்டியின்றி தவித்துக்கொண்டிருக்கின்றது. இறைவழிபாடு, இறையியல் சிந்தனைகள் எம் மத்தியில் அருகி வருவது வேதனைக்குரியது. கல்வியியலாளர்களிடையே கடும் போட்டியும், நீதியற்ற தீர்மானங்களை கூசாமல் பிரயோகிக்கும் தன்மையும் தொடர்ந்து கொண்டு செல்கிறது. இந்நிலையில் தன்னைத் தான் அறிவதற்கு வாழ்வியல் கோட்பாட்டினை உணர்வதற்கு சைவசித்தாந்தக் கல்வியின் பரிமானம் மிகவும் அவசியமாகும். உலகில் தோன்றிய தத்துவக் கோட்பாடுகளில் ஒப்பற்ற தத்துவமாக மதிக்கப்படுவது சைவசித்தாந்தம் இப்புனிதமான தத்துவத்தை தெளிவாகக் கற்றுணர்ந்தவர்கள் உலகை உணர்ந்தனர். எளிமையாக வாழ்ந்தனர். எந்நிலையிலும் தளம்பாது நின்று நிலைபெற்றனர். உலக நன்மையின் பக்கமாக நின்றனர். எனவே அத்துறை தொடர்பான கல்வியை உருவாக்க முனைந்த பல்கலைக்கழக சமூகத்தைப் பராட்டவேண்டியது அனைவரது கடமையாகும். இத்துறையில் கற்பிப்பதற்கு இத்துறை சார்ந்த பல்கலைக் கழகத்திற்கு வெளியேயுள்ள அறிஞர்களை பயன்படுத்துவதும் பாராட்டுக்குரியது. இத்துறையினால் பெறப்படுகின்ற பட்டத்தைவிட இத்துறைசார் ஞானத்தினால் ஏற்படப் போகின்ற மாற்றமே முக்கியமானது. இத்துறையில் பெறப்படுகின்ற பட்டம் தொழிற் தகமையை உயர்த்த மட்டும் பயன்தருமானால் சைவசித்தாந்தத்தின் மெய்ப்பொருளை காணமுடியாது. இத்துறையில் கற்பவர்கள் இம்மண்ணில் உண்மை நிலைக்க, உயர் ஞானம் சிறக்க வாய்ப்பு ஏற்படுத்த வேண்டும். யாழ். பல்கலைக்கழக சைவசித்தாந்தத் துறைக்காக பலர் நிரந்தர புலமைப் பரிசு அறக்கடடளை நிதிகளை பல வருடங்களுக்கு முன்னே வைப்பிலிட்டமை குறிப்பிடத்தக்கது. ஏலவே ஸ்ரீ துர்க்காதேவி தேவஸ்தானத்தின் பேரில் எங்கள் சிவத்தமிழ்ச்செல்வி அம்மா அவர்கள் இந்நிதிக்கு ரூபா 50,000/= வைப்பிலிட்டு சிறப்பித்துள்ளார். இத்துறைசார் கல்விக்கு அனைத்துச் சைவ மக்களும் ஆதரவு கொடுத்தல் அவசியம்.

– ஆசிரியர்

*** *** ***

**சிவனடியார் தொண்டர் மடாலயப்பணி (5ஆம் பக்கம்) என்னும் கட்டுரையில் பின்வருவனவற்றையும் சேர்த்து வாசிக்கவும்.**

**திருத்தம்**

(1) மேலே 3ஆம் பக்கத்தில் 7ஆவது வரியில் வி. சீனியர் என்ற பெயரையும் சேர்த்து வாசிக்கவும்.

(2) மேலே 4ஆம் பந்தியில் 4ஆவது வரியில் 80 பரப்பை 48 பரப்பு எனத் திருத்தப்பட்டுள்ளது.

# திருமுறைகளைப் பாராயணம் செய்வோமாக

**கலாநிதி குமாரசாமி சோமசுந்தரம் அவர்கள்**

சைவத்துக்குப் பொதுநூல் வேதம் எனவும் சிறப்பு நூல் ஆகமம் எனவும் கொள்ளப்படுகின்றன. இவை இறைவனால் அருளப்பட்டவை. சைவத்தின் முழுமுதற் கடவுள் சிவபெருமான் ஆவார். திருமுறைகள் தமிழ்வேதம் என போற்றப்படுகின்றன. சிவபெருமானின் திருவருளை முழுமையாகப் பெற்ற திருவருட்செல்வர்களால், சிவபெருமான் உள்நின்றுணர்த்தப் பாடப்பெற்ற தெய்வத் திருநூல்களே திருமுறைகளாக வகுக்கப்பெற்றுள்ளன. திருமுறைகள் பன்னிரண்டாகும்.

ஆலயங்களிலும், வீடுகளிலும் மற்றைய இடங்களிலும் கடவுள் வழிபாட்டின்போது இத்திருமுறைப் பாடல்களை பாடிப்பரவுவது சைவமரபாகும். பன்னிருதிருமுறைகளிலும் அடங்கும் தோத்திரப்பாடல்கள் பிரணவமயமானவை. தமிழ்வேதமாக விளங்குகின்ற திருமுறைப்பாடல்களுடன் வேறுபாடல்களை சேர்க்கக்கூடாது என்பது சிவ பரம்பொருளின் திருவுள்ளக்கிடக்கை என ஆன்றோர் கூறியுள்ளனர். அதனை ஏற்று நடக்கவேண்டியது எமது கடமையாகும். ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் திருமுறைப்பாடல்கள் மட்டுமே அருட்பாக்கள், அவ்வருட்பாக்கள் மாத்திரமே கடவுள் சந்நிதிகளில் ஓதத் தகுந்தவை. ஏனைய பாடல்கள் மருட்பாக்கள் எனக் கூறியிருந்தமை நோக்கற்பாலது.

திருமுறைப் பாடல்களைப் பாடத் தொடங்க முன்பும் பாடிமுடிந்த பின்பும் "திருச்சிற்றம்பலம்" என்னும் தமிழ் மந்திரம் ஓதப்படுதல் வேண்டும்.

தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருத்தொண்டர்புராணம் என்ற ஒழுங்கு முறையில் பஞ்சபுராணம் ஓதப்படுதல் முறையாகும்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி ஆகிய மூவரும் தேவாரம் பாடியவர்கள். அவர்களை தேவார முதலிகள் என்பர். அவர்கள் பாடியருளிய தேவாரத் திருப்பதிகங்கள் முதல் ஏழு திருமுறைகளிலும் வைக்கப்பட்டுள்ளன. திருவாசகம் எட்டாம் திருமுறையிலும், திருவிசைப்பா ஒன்பதாம் திருமுறையிலும், திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டாம் திருமுறையிலும் இடம்பெற்றுள்ளன.

இத்திருமுறைப்பாடல்களை இறைவனை நினைத்து மனமுருகி காதலாகி, கசிந்து, கண்ணீர் மல்க ஓதுவார் நன்னெறிக்கு இட்டுச் செல்லப்படுவர் என்பது அனுபூதிமான்களின் முடிவு. "பண்ணோடிசை பாடல் மறந்தறியேன்" என்பதற்கிணங்க இப்பாடல்களை உரிய பண்களில் இசையமைத்து பக்தியோடு பாடவேண்டும் என்பது குறிப்பிடத்தக்கது.

பரம்பொருளாகிய சிவபெருமானை வாழ்த்தித் துதிப்பனவாகவும் அப்பெருமானின் பெருமை, சிறப்பு என்பவற்றை போற்றுதல் செய்வனவாகும், சைவசமய உண்மைகளை நிலை நிறுத்துவனவாகவும், பக்தியையும் தெய்வீகத்தையம் வளர்ப்பனவாயும், ஓதியுணர்பவர்களை உய்விப்பனவாயும், மந்திரம், தந்திரம், மருந்து என மூன்றுமாய் விளங்கித் தீரா நோய் தீர்த்தருளும் தன்மையனவாகவும், தெய்வத்தன்மை பொருந்தியனவாயும் விளங்கும் அருள்நூல்கள் திருமுறைகள் ஆகும்.

இறைவன் ஒருவனே, அந்த ஒருவன் சிவனே, அவனோடு ஒக்குந் தெய்வம் வேறொன்றில்லை, சிவபெருமானே முழுமுதல், அப்பெருமான் திருவருட் சக்தியுடன் இணைந்து ஒருபொருளாகவே உள்ளான். அன்பு, நீதி, உண்மை, செம்மை, அருள், ஞானம் என்பவற்றை அதிட்டித் நிற்கும் சிவம், அவற்றினின்றும் பிரிவிலா ஒருபொருள் ஆகவுள்ளது, எல்லா உயிர்கள் மீதும் அளப்பெரும் கருணை கொண்ட சிவபெருமான், அவைகளின் ஈடேற்றத்தின் பொருட்டு ஐந்தொழில்களை செய்கின்றான், அப்பெருமானின் மறைமொழி திருவைந்தெழுத்து, சிவசின்னங்கள் திருநீறும் உருத்திராட்சமும், சிவனடியாரின் பெருமை சொல்லவும் பெரிதே, அப்பெருமானிடம்

சேர்ப்பிக்கும் நால்வகை நன்னெறிகளாக விளங்குவன சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவாகும். இவைபோன்றே நுண்ணிய முடிந்த முடிவுகளைத் தெட்டத் தெளிவாக அறிவிப்பது திருமுறைகள் என்பதை நாம் அறிந்து தெளிந்து கொள்ளுதல் வேண்டும்.

அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருப்பினும், எங்கள் மனம், வாக்கு, காயங்களுக்கு எட்டாதனவனாக இறைவன் உள்ளான். இந்நிலை பாலில் நெய் இருப்பது போன்று விளங்காது நிற்கின்ற நிலையாகும். ஆலயத்திலும், குருவினிடத்திலும், சிவனடியார்களிடத்திலும் தயிரில் நெய்போல வெளிப்பட்டுக் காணப்படுகின்றான். அடியவர்களின் தூய மனங்களிலும், அன்பு உள்ளங்களிலும், நீதி வழுவா நெறிமுறையில் வாழும் பெரியவர்களில் இறைவன் எழுந்தருளியிருக்கின்றான் என்ற முறையில் அவர்களின் உடம்பும் ஓர் ஆலயமாகவே திகழ்கின்றது.

பக்தி இயக்கம் ஆனது ஆன்மீக அடிப்படையில் மனித வாழ்க்கையைத் தூய்மைப்படுத்தி வையகத்தில் வாழ்வாங்கு வாழ்வித்து, மனிதப்பிறவி எடுத்தன் சீரிய நோக்கமாகிய கடவுளை வணங்கி, முத்தி இன்பம் பெறுதலுக்கு உறுதுணையாக அமைகின்றது. பக்தி இயக்கத்தை போஷித்து வளர்க்கும் சாதனமாக திருமுறைகள் விளங்குகின்றன.

திருமுறைகளைப் பாராயணம் செய்தல் எமது அன்றாடம் வாழ்க்கைப் பழக்கமாகக் கொண்டு நல்வாழ்வு வாழ்வோமாக.



## சிவராத்திரியெனும் சிறந்த விரதம்

சிவனுக் குரிய சிறந்த விரதம்
சிவராத் திரியெனும் விரதமே ஆகும்
அவமே பொழுதை அவனியில் போக்காது
அனுஷ்டித் தவனின் அருளைப் பெறுவீர்
சிவனின் சோதி வடிவின் அடிமுடி
தேடித் தேடிப் பிரமனும் விஷ்ணுவும்
துவண்டு போயினர் அகந்தை அகன்றது
சோதி வடிவம் சுருங்கி லிங்கமாய்
இவர்கள் முன்னே காட்சி கொடுத்தது
என்றும் சிவனே பெரியவர் வல்லவர்
விபரம் தெரிந்து சிவனை வேண்டினர்
வேத நாயகன் அருளே புரிந்தார்

## திருநாளைப்போவார் கண்ட தில்லைக் காட்சி

சிதம்பரம் போக வேண்டும் அங்கே
தில்லை நடேசரைக் காண வேண்டும்
இதயத்தின் எண்ணம் இன்று கனிந்தது
எங்கும் வேத ஒலியும் ஒலித்து
பதறியது உள்ளம் பகலும் இரவும்
பரிதவிப்பு உடனே தில்லையை சுற்றினார்
அதனாலே சோர்ந்து அயர்ந்து உறங்கினார்
அடியவர்கள் வேண்டுவ தீயும் இறைவன்
அதற்கொரு வழியும் வகுத்துக் கொடுத்தார்
அறிந்துகொண்ட மூவா யிரவர் தாங்கள்
உதவுவதற்கு ஓடி வந்தனர் அருளால்
உரியதொரு நடேசர் கூத்தும் கண்டனர்

**கவிஞர். வ. யோகானந்தசிவம்**

# சிவனடியார் தொண்டர் மடாலயப்பணி

சைவப்புலவர் க. நித்திய சசிதரன் அவர்கள்

வீணாகானபுரம் எனச் சிறப்பிக்கும் நகுலேஸ்வரத்தை எல்லையாக கொண்ட நிலையில் பன்னாலையம்பதி தெல்லிநகரின் மேற்குப் பகுதியாய் அமைந்துள்ளது. பன்னெடுங்காலமாய் கோயில் கொண்ட புண்ணிய கிராமத்தில் அந்தணர்கள்,சைவப்பெரியார்கள், சித்தர்கள், கல்விமான்கள். தத்துவாதிகள், நீதிபதிகள், வைத்தியகலாநிதிகள், மண்தொட்டு வளம்படுத்தும் விவசாயக்குடியாளர் கூடிய பதி பன்னாலை ஆகும்.

பாரத நாட்டில்லிருந்து இயந்திரமும் அவற்றோடு கூடிய சித்துடன் முத்திருஷி அவர் காலத்தில் திருவீழிச்சரம் பாலசுப்பிரமணியர் ஆலயம் அமைந்துள்ளது. அதே ஆலய பின் பக்கம் சிவலிங்கம், நடராஜர், சிவகாமியம்மை, மாணிக்கவாசகர் திருவுருவங்கள் கொண்ட நாட்சார வீடு போன்ற மடம் அமைந்துள்ளது. இம் மடத்தின் ஆவணத்தின் படி 1940ஆம் ஆண்டு முதல் இம் மடத்தின் பெருமை பேசப்படுகின்றது. இம் மடம் தாடியர் மடம் எனச் சுருங்கக் கூறுவர். ஏனென்றால் பன்னாலை உயர்குடிப்பிறப்பாளர் சைவச்சீலர் திரு இளையதம்பி அவர்கள் பிரமச்சாரியாராக இருந்து நீண்ட சடாமுடியும் வெண்ணிறத்தாடியும் அகத்தியக் கோலமாய் அங்கு குடியிருந்தார்.

இவருடைய காலத்தில் சிவனடியார் தொண்டர்மடம் என அழைக்கப்படும் இம்மடத்தில் நால்வர் குருபூசை, மானம்பூ உற்சவம், திருவெம்பாவை, திருவாசக விழா எனப் பல விழாக்களும், பஜனைகள், வழிபாட்டுஅறைகள், தியானப்பயிற்சி, என்பன முறைப்படி நிகழ்த்தப்பட்டது. இவருடைய சிவபதப்பேறுடன் ஊரில் உள்ள பெரியோர்கள் ஒன்ற கூடி நம்பிக்கை சபை உருவாக்கி அதன் மூலம் ஊக்க ஆக்கத்துடன் நடாத்தி வந்தனர். அப்பெரியார் வரிசையில் திரு. வி.சங்கரப்பிள்ளை, திரு.சி. இளையகுட்டி, திரு.எஸ்.சிவபாதசுந்தரம், திரு.பை.பொன்னையா ஆகியோர் அங்கம் வகுத்தனர்,இவர்களில் திரு.வி சங்கரப்பிள்ளை ஆசிரியர் தவிர ஏனையோர் இறை இன்பம் பெற்று விட்டனர்.

இம்மடம் இறுதிக்காலத்தே திரு. வை.பொன்னையா (ஓய்வு பெற்ற அதிபர்) அவர்களால் பொறுப்பேற்று சிறப்புற நடாத்தி வரப்பட்டது. 1992ஆம் ஆண்டு வரையும் சிவபணி மேலோங்கியது. இச்சிவனடியார் தொண்டர்மடத்தின் சொத்தாவணத்தின் படி ஏறக்குறைய 80 பரப்பு வயற் காணி நிலம் உண்டு. அதன் வழிபெறும் வருவாய் குருபூசையையும் ஏனைய விழாக்களும் அன்னம் பாலித்தலும் தொன்றுதொட்டு செயற்பட உதவியாக இருந்தது.

இவற்றோடு சமயப் பெரியார்களின் சைவப் சொற்பொழிவுகள், சைவச்சித்தாந்த வகுப்புக்கள், சிவதீட்சை வழங்குதல், புராணபடனம் செய்தல் என சைவசமயம் சார்ந்த செயல்கள் நெறிமுறையாக இடம் பெயரும் வரையும் செழிப்போடு நடைபெற்று வந்தன.

இடம்பெயர்வினால் கைவிடப்பட்ட எமது ஊரினை மீண்டும் 1996ஆம் ஆண்டு வந்தபோது ஊர்கள் அடவிக்காடாக தென்பட்டது. பின்னர் கிராம உத்தியோகத்தரது முயர்சியில் பலரும் குடியமர்த்தப்பட்டு கோயில் வழிபாடுகள் ஆரம்பமாகியும் சிவனடியார் தொண்டர் மடம் நிலைகுலைதிருந்ததே. விக்கிரங்கள் களவாடப்பட்டும்,பொருட்கள் கட்டிடங்கள் சிதைந்த நிலையிலும் காணப்பட்டன. இந்த நிலையினைக்கண்ட

ஆலய குருமார்கள், ஊர்மக்கள், ஒன்று கூடி இறுதிவரை பணியாற்றிய ஆசிரியமணி பொன்னையா அவர்கள் வெளியூரில் இறைபதம் அடைந்த போதும் அவருடைய புத்திரர்களின் உதவியுடன் சிவப்பணிகள் தொடர பல அன்பர்கள் முன்மாதிரியாய் தொழில்பட இன்று புனரமைப்பு பணிகளோடு கும்பாபிஷேக வைபவம் 28-01-2008 திங்கட்கிழமை தலை சிறந்த அந்தணக்குருமார்களினால் பத்தி பூர்வமாக நடைபெற்றது.

இம் மடம் தொடர்ந்து வரும் காலத்தில் முன்னவர் காட்டிய நன்நெறியை ஒழுகச் செய்து பன்னாலையம்பதிக்கு மட்டுமல்ல பலருக்கும் பணிபுரியும் மடாலயமாய் விளங்க அன்பர்கள் ஆர்வலர்கள் ஆதரித்து அரும்பணி செய்ய அருள் சுரந்தளிப்பான் சிவகாமியம்மை சமேதராய் விளங்கும் நடராஜப் பெருமான் திருவடியைப் பிரார்த்திப்போம்.

**இன்பமே சூழ்க எல்லோரும் வாழ்க**



# சிந்தை மகிழ்ந்துருகும் சிவராத்திரி

சிவன்திருப் புகழினைப் பாடுமனமே
சிந்தையிலே வந்துநலம் கூடும்தினமே
அவனியில் வாழ்ந்திடும் வழியிதுவே
அல்லலறுத் தானந்த நிலைதருமே

அகந்தையினால் நாரணனும் நான்முகனும்
ஆடுகள மீதிலிடி யோசை கொண்டாட
புகலரிய தீயின்மலை யாகவெழுந்தான்
பூரணன்தன் அடிமுடியைத் தேடவும் வைத்தான்

நகுலமுனி வர்தம் பிணிகெடுத்தார்
நளன்முசு குந்தன்தொழ அருள்புரிந்தார்
ஆகுலம் ஒட்டியெமை காத்துநின்றார்
அலைகடல் அருகினில் கோயில் கொண்டார்

அடிமுடியைத் தேடியவர் அன்னமாகவும்
அரியநிலம் பிளந்திடவே வராகமாகவும்
ஓடியொளி முடிவினையே காணுதல்விட்டு
உமையழகன் பாதமலர் சேர்ந்ததிருநாள்

பாதிமதி நதிசடை மீதில்வைத்தார்
பார்பதி தேவியை பாகம் வைத்தார்
ஆதியந்தம் இல்லையென்ற பொருள்விளங்க
அடிமுடி தேடவரும் ஒளியானார்

அப்பனருள் செப்பும்சிவ ராத்திரியென்று
அண்டர்புகழ் இத்தினமே அண்ணாமலையில்
வெப்பொழிந்து எழுந்தமலை தானுமொடுங்கி
உண்ணாமுலை அரசியோடும் உறையுந்தலமே

வந்திமனம் மகிழவழி காட்டிநின்றார்
வாதவூர்க் காகவைகை பெருக்கிநின்றார்
சிந்தை நொந்து நொந்தழைத்தால் உடன்வருவார்
திங்கள்சடை மீதில்வைத்த புண்ணியனே

இப்பெருமை செப்பிடுவீர் இற்றைப்பொழுதில்
இமைமூடித் துயிலாது விழித்திருந்தே
எப்பொழுதும் ஓம்நமசி வாயவென்றும்மை
பாடியிறை பாதமலர் தொழுதெழுவீர்

சு. குகதேவன்

# சிவபெருமானும் செம்மனச் செல்வியும்

திரு. சிவசண்முகவடிவேல் அவர்கள்

**சென்ற இதழ் தொடர்ச்சி.....**

**(ஔ)**

சோமசுந்தரக் கடவுள் கூலியாளராக வந்தார். செம்மனச் செல்வியாரிடத்தில் இரும்பசி காரணமாக இனிய பிட்டினை வாங்கி அமுது செய்தார்......... இது வெளிப்பார்வை நோக்கு. உள்ளே புட்டுப் பார்த்தால் பிட்டின் உண்மை வெளிச்சமாகும். அதன் தாற்பரியம் தெரியவரும்.

இறைவன் இமைப்பொழுதிலும் பக்குவ ஆன்மாக்களுடைய மலபரிபாகத்தை நோக்கிய வண்ணமாக இருப்பார். இருவினை ஒப்பில்லாத அபக்குவரெல்லாம் அந்நிலை எய்தும் அளவும் வருந்திப் பெரிய சனன சாகரத்தில் வீழ்ந்து அழுந்துவர். தமது இருவினை ஒப்பு மலபரிபாகங்களைத் தமது பொருட்டு எதிர்நோக்கி இருக்கும் பதிப்பொருளாகிய இறைவனையும் பிறப்பு இறப்பு வேதனையில் பட்டு உழலும் பசுக்களாகிய தம்மையும் சிந்திக்க மாட்டார்கள். அதற்குப் பிரமாணம் இது.

**எவர்க்கு மிம்மலஞ் சேரவில் கொழியா**
**திருப்ப தென்னெனி லின்னல்கொள் பிறவித்**
**துவக்கெ ழுந்தம திருவினைப் பயனும்**
**துலையுகும் பொருளென நிறை நிகர்தா**
**லவர்க்கு நம்பதங் கொடுத்திட ரொழிப்போ**
**மதுவி லாதவ ரழுங்கியவ் வளவும்**
**பவப்பெ ருங்கடல் வீழ்வர்தம் பருவம்**
**பார்க்கு மெம்மையுந் தம்மையும் பாரார்.**

செம்மனச்செல்வியார் பக்குவான்மா என்பதனை இறைவன் பார்த்துக் கொண்டே இருந்தனன். அதற்குரிய காலமானதால் அம்மையாருக்கு நற்கதி அருளும் பொருட்டு வந்தார். வந்தியாருடை பூர்வ புண்ணியத்திற்குப் பொருத்தமாக கூடையும் கொட்டுமாகக் கூலியாளராக வெளிவந்தனர்.

**(ஃ)**

இறைவன் அன்புடைய அடியாருடைய வினைகளைத் தானாக எடுத்துச் சுமப்பவன். நல்லடியார்களுக்கு நல் வாழ்வினையும் நல்குவான். திருவிளையாடற் புராணம் செப்பும்.

சித்தி விநாயகக் கடவுள் வன் கண்மையையுடைய ஆணவ சம்பந்த முள்ள வஞ்ச வினைச் சீவபோதம் என்னும் கவளத்தைக் கொடுக்க மகிழ்ந்து அருந்துவார். அருளாகிய மதப் பெருக்கை அள்ளிச் சொரிவார்,

**ஏற்பது வினையை ஈவது இன்பத்தை**
**உள்ளமெனுங் கூடத்தி னூக்க மெனுந்**
**தறிநிறுவி யுறுதி யாகத்**
**தள்ளரிய வன்பென்னுந் தொடர்பூட்டி**
**யிடைப்படுத்தித் தறுகட் பாசக்**
**கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்**
**களித்துண்டு கருணை யென்னும்**
**வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை**
**நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம்**

சித்திவிநாயகர் செய்யும் திறத்தையே சோமசுந்தரக்கடவுள் வந்தியாருக்கு அருள வருகை புரிந்தார்.

செம்மனத்தாருடைய எஞ்சியிருந்த கன்ம வினையையே சோமசுந்தரக்கடவுள் இனிய பிட்டாக வாங்கிப் புசித்தார். சிவலோக வாழ்விற்கு வந்தியார் தகுதிபெற்றதனால் தான் செல்வியாரைச் சிவலோகத்தில் சேர்ப்பித்தார்கள்.

இக்கால நடைமுறைவழக்கும் இதுவேயாகும். ஒருவருடைய வினையின்மை உறுதிப்படுத்தப்பட்டாலன்றிக் கடவுச் சீட்டு வழங்கப்படமாட்டாது. பூலோகக் கடவுப்பத்திரமின்றிச் சிவலோகத்தில் எந்த வகையாலும் உள்நுழைய முடியாது.

சிவபெருமானும் செம்மனச்செல்வியாருக்கு வினை எச்சம் இன்மையை உறுதிப்படுத்து முகமாகவே இனியபிட்டு இன்னும் வேண்டும் என்று ஏற்று இன்புற அமுது செய்தருளினார்.

சோமசுந்தரப்பெருமான் பிட்டின் மூலம் வந்தியினுடைய வினையை வலிந்து வாங்கிக் கொண்டார். இறைவனுடைய வினைப்பாரத்தை இழிச்ச அரசன் பிரம்பினால் தழும்பு ஏற்படுத்தித் தனதாக்கிக் கொண்டான்.

அரிமர்த்தனபாண்டியன் சுமக்கும் வினைப்பாரத்தை இறக்கு அவனுடைய புத்திரர்களோ அல்லது சந்ததியிலுள்ளவர்களோ பக்குவ காலத்தில் முன்வருவார்கள் என்பது சமய உண்மை.

சிவபெருமானுக்கும் செம்மனச்செல்வியாருக்கும் நிகழ்ந்த கதைப்பின்னல்களைத் திருவாதவூரடிகள் புராணம், திருவிளையாடற் புராணம் என்பனவற்றினால் தெளியலாம்.

சிவபிரான் கூலியாளராக வந்தமையும், செம்மனச்செல்வியார் பிட்டமுது இட்டமையும், பிட்டிற்கு நேரான வேலை செய்தமையும், பிரம்படி பட்டமையும் போன்ற திருச்செயல்களை திருமுறைப்பாடல்கள் தரும் அகச்சான்றுகள் ஆகும். அவற்றுள் ஒருசில இவை;

### சிவபிரான் ஆற்றிற்கு அணை அமைத்தமை

1. அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்றும்
அணிகிளரும் உருமென்ன அடர்க்குங் கேழல்
மருப்போட்டு மணிவயிரக் கோவை தோன்றும்
மணமலிந்து நடந்தோன்றும் மணியார் வைகைத்
திருக்கோட்டில் நின்றதோர் திறமுந் தோன்றும்
செக்கர்வா னெளிமிக்குத் திகழ்ந்த சோதிப்
பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும்
பொழிதிகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே (6)

### சிவபிரான் வந்திக்கு கூலியானானமை

2. ஆங்கது தன்னில் அடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும் (3)

### சிவபிரான் தழும்பு பட்டமை

3. பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுங்காண் அம்மானாய் (8)

### பிட்டிற்கு அளவாக மண் சுமந்தமை

4. பிட்டு நேர்பட மண்சு மந்த
பெருந்து றைப்பெரும் பித்தனே
சட்ட நேர்பட வந்திலாத
சழக்க னேன் உனைச் சார்ந்திலேன்
சிட்டனேசிவ லோக னேசிறு
நாயி னுங்கடை யாயவெங்
கட்ட னேனையும் ஆட்கொள் வான்வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே (8)

முற்றும்.

சிறுவர் விருந்து:

# கோபுரம் காத்த கோமான்

அருட்சகோதரி ஜதீஸ்வரி அவர்கள்

அன்பான பிள்ளைகளே!

அன்புவாழ்த்து! எப்படி இருக்கிறீர்கள்? நன்றாகப் படித்து நல்லனகற்று நல்லவர்களாக வாழ்க! தினமும் இறைவனைக் கும்பிடவேண்டும். தினமும் கோயிலுக்குப் போவது நல்லது. முடியாவிட்டால் கிடைக்கும் நேரத்தில் தவறாது கோயிலுக்குப் போகவேண்டும். நல்ல கோயில் நல்ல ஊற்று உள்ள குளம் மாதிரி அருள் ஊறி நிறையும் இடம். கோயில் வீதியில் அல்லது கோபுர வாசலில் போய்க்கும்பிட்டு விழுந்து எழுந்து சில நிமிடம் மௌனமாக அங்கே உட்கார்ந்து இருந்தாலே போதும். நிறைய நல்ல பலன் கிடைக்கும். கோபுர தரிசனம் கோடி புண்ணியம் என்பார்கள். இன்று ஒரு கோபுரத்திற்காக தன்னையே கொடுத்த தாளாண்மை மிக்க அரசன் ஒருவரின் கதையைக் கேளுங்கள்.

தமிழகத்திலே பாண்டிய நாட்டிலே சிவ கங்கை என்ற பகுதியும் உண்டு. அந்த சிவ கங்கைப் பிரதேசத்திலே கானப்பேரூர் அல்லது கானப்பேரெயில் என்ற பெயர் கொண்ட ஊரும் உள்ளது. அந்த ஊரை காளையார் கோயில் என்று அந்த மக்கள் கூறுவர். அங்கே ஒரு சிவன் கோயில் உள்ளது. வரகுண பாண்டியன் அந்தப் பழைய சிவன் கோயிலை திருத்திப் புதுப்பித்தான். ஒரு கோபுரமும் கட்டினான். சம்பந்தர், சுந்தரர், அருணகிரிநாதர் இந்த கோயில் சுவாமி மீது பதிகம் பாடியுள்ளார்கள். அவர்கள் தரிசித்து வழிபட்ட இந்தக் கோயில் மிகப் பழையது. உக்கிரப்பெருவழுதி என்ற பாண்டிய ராஜா இங்கே ஒரு கோட்டையையும் கட்டியிருந்தார். கோயிலிலே மூன்று சந்நிதிகள் இருக்கின்றன. மூன்று சுவாமிகள், மூன்று சக்திகள் ஒன்று காளீஸ்வரர் சொர்ணவல்லி சந்நிதி இரண்டாவது சோமேசர் - சௌந்தரநாயகி சந்நிதி மூன்றாவது சொக்கர் என்ற சுந்தரேசரர் - மீனாட்சி சந்நிதி. சம்பந்தர், சுந்தரர் பாடல் பெற்றவர் முதற் சந்நிதியில் இருக்கின்ற காளீஸ்வரர்தாம் இவருடைய சந்நிதி முன்பாகத்தான் வரகுணபாண்டியன் கட்டிய கோபுரம் இருக்கிறது. கோயிலுக்கு உரிய நிலபுலன், சொத்துக்கள் எல்லாம் இந்தக் காளீஸ்வரர்பெயரிலேதான் எழுதி வைத்திருக்கிறார்கள்.

திருவிழாக்காலத்திலே ஊர்வலம் வருபவர் இரண்டாவது சந்நிதியில் உள்ள சோமேசர், சௌந்தரநாயகியும் சிறப்பான படையல், பொங்கல், விஷேட நைவேத்தியங்கள் மூன்றாவது சந்நிதி சொக்கருக்குத்தான். அதனாலே, அந்த ஊரில் ஒரு வேடிக்கைப் பழமொழிகூட உண்டு, "காளைதேட, சோமர் அழிக்க, சொக்கர் சுகிக்க" என்பதுதான் அது.

இந்தக் கோயிலை புனருத்தாரணம் செய்து, சொக்கர் சந்நிதியிலே உயரமான கோபுரம் ஒன்றையும் கட்டியவர் மருதபாண்டியர் என்பவர். இவர் பாண்டியரிடமிருந்து பிரிந்த சிவகங்கைச் சமஸ்தானத்தை ஆண்டவர். வீரமும், கொடையும், ஈரமும், நேர்மையும், சைவநன்நெறி தவறாத சீலமும் படைத்தவர் மருத பாண்டியர். கோபுர உச்சியில் ஏறி நின்று பார்த்தார் மதுரைச் சுந்தரேசர் கோயில் கோபுரம் தெரியக்கூடியதாக உயர்ந்த கோபுரம் எழுப்பிய அவரை "மதுரைக் கோபுரம் தெரியக் கட்டிய மருத பாண்டியன் வாராரே!" என்று மக்கள் கும்மி கொட்டி குறவை இட்டு வாழ்த்தினார்கள்.

மருதபாண்டியர் காலத்திலேதான் 'கிழக்கிந்தியக்கம்பெனி' என்ற வெள்ளையர் கூட்டம். தமிழகத்திலே நாடு பிடிக்கத் தொடங்கினர். பாளையங்கோட்டை கட்டப்பொம்மனை பிடித்துத் தூக்கிலிட்டபின் சிவகங்கைமீது படையெடுத்தார்கள். மருதபாண்டியர் தீரத்துடன் எதிர்த்தார். ஆனால், ஆங்கிலேயரின் நவீன ஆயுதங்களுக்கு ஈடுகொடுக்க முடியாமல் மருதபாண்டிரின் மறவர்படை அழிந்தது. தம்பியான சின்னமருதுவும் மடிந்தார். தனித்துப்போன மருதபாண்டியர் மெய்க்காப்பாளனுடன் தப்பியோடி காட்டுப்பகுதியில்

தலைமறைவாக வாழ்ந்தார். நாட்டு மக்கள் அவருக்கு உறுதுணையாக இருந்தார்கள். அவரைப்பிடிப்பதற்கு வெள்ளை அரசு எத்தனையோ முயற்சி செய்தும் அவர் சிக்கவில்லை. ஆத்திரமடைந்த வெள்ளையர் கம்பனித்தலைவன் ஒரு சூழ்ச்சி செய்தான்.

"மருதபாண்டியன் தானாக வந்து சரணடைய வேண்டும். இல்லாவிட்டால் அவர்கட்டிய காளையார் கோயில் பெரிய கோபுரம் இடித்துத் தரைமட்டம் ஆக்கப்படும்." என்று சிவகங்கைச் சீமை முழுவதும் தண்டோராப்போடுவித்தான். காட்டில் திரிந்த மருதபாண்டியருக்கு உதவிபுரிந்தோர் மூலம் எப்படியோ இந்தச் செய்தி அவரை அடைந்தது. எதற்குமே கலங்காத வீர மறவரான மருதபாண்டியன் இந்தச் செய்தியறிந்து கலங்கிப்போனார். "சிவன்கோயில் அங்கம், சொக்கர் சந்நிதிக்கோபுரம் என்னால் இடிபடுவதா? கூடாது! கோபுரம் இடிபட்டுத்தான் உடல்கொண்டு உலாவி என்னபயன்!" என்று எண்ணி நடுங்கினார். இரவு நேரத்தில், தன்னருகில் இருந்த எவரும் அறியாதபடி புறப்பட்டு, நேரே வெள்ளைக்காரத் தளபதியிடம் சென்று சரணடைந்தார். தன் தந்திரம் பலித்த மகிழ்ச்சியில் எக்காளமிட்ட வெள்ளையன் கேட்டான், 'உமது கடைசி விருப்பம் என்ன?' என்று "காளையார்கோயில் சந்நிதி முன்பாக எனது உடல் அடக்கம் செய்யப்பட வேண்டும்." என்றார் அந்தத் தியாக மறவன். அவரைத்தூக்கிலிட்டுக் கொன்றனர் வெள்ளையர். உடலை மக்கள் பொறுப்பெடுத்துச் சொக்கேசர் சந்நிதிமுன் திருவெளிவீதியில் சமாதி வைத்தனர்.

*** *** ***

**இறைவன் சந்நிதியை நெருங்க:**

**தூய்மையான இதயம் இல்லாத எந்த ஆணும் பெண்ணும் இறைவன் சந்நிதியை நெருங்க முடியாது.**

**- காந்தி அடிகள்.**

**ஒருவனிடம் அன்பு இல்லாவிட்டால் அவனிடம் எவ்வளவு ஞானம் இருந்தாலும் அவனால் கடவுளை அடையமுடியாது.**

**- சுவாமி விவேகானந்தர்.**

**இறைவன் உன் உள்ளத்தில் எழுந்தருள:**

**இறைவன் உன் உள்ளத்தில் எழுந்தருள வேண்டுமேயானால் உன் உள்ளம் தூய்மையாக இருக்க வேண்டும்.**

**குப்பை நிறைந்த இடத்தில் நீ இருக்க அருவருப்பு கொள்வாயன்றோ? அதுபோல் கோபம், காமம், வஞ்சனை சூது, புலை, கொலை, பொய் முதலிய அசுத்தங்கள் நிறைந்த உள்ளத்தில் இறைவன் இருக்க மாட்டான். ஆனபடியால் சாந்தமாகிய பசுவின் சாணத்தால் மெழுகி அன்பு சந்தனம் தெளித்து அறிவு என்ற விளக்கேற்றி உண்மை என்ற தூபம் கமழவை. அப்போது அங்கே இறைவன் எழுந்தருளுவான்.**

**- கிருபானந்தவாரியார்.**

**மேட்டு நிலத்தில் பெய்தபோதும் மழைத்தண்ணீர் அங்கே தங்கி இருப்பதில்லை. பள்ளமான இடத்திற்கு ஓடிவந்து விடுகின்றது. அதைப்போலவே இறைவனுடைய அருளானது தற்பெருமையும், அகந்தையும் கொண்டிருப்பவர்களின் உள்ளத்தில் தங்கியிருக்காது பணிவாக இருப்பவர்களின் உள்ளத்தையே நாடி அடைகிறது.**

**- ராமகிருஷ்ணர்.**

தொகுப்பு **- கி. துர்க்கா**



# சிவன் அருட் கதைகள்

மாதாஜி அவர்கள்

## 32. வளையல் விற்ற கதை

சிவபெருமான் தேவதாரு வனத்திலுள்ள இருடிகளின் துணைவியரின் கற்புநெறி காட்டத் திருவுளம் கொண்டார். இதனால் பிச்சாடணத்திற்குரிய இலக்கண இலட்சணங்களுடன் கௌபீனம் தரித்தவராய் பிச்சைப் பாத்திரத்துடன் தேவதாரு வனத்திற்கு எழுந்தருளினார். அவருடைய கிற்சிலம்பு முதல் மற்றைய ஒலிகள் செவிகளில் பட்டதும், இருடி பத்தினிகள் விரைந்து பிச்சை கொடுக்க வீட்டுக்குப்புறத்தே வந்தார்கள். பிச்சாடனரின் பேரழகைக் கண்டு காமத்தீயினால் உருகி வளையல் கழலப் பசய நிறம் கொண்ட கூந்தல் சோர நின்றார்கள். கருமமே கருத்தா என்று பிதற்றும் மீமாஞ்சைக்காரர்களுடைய செயலை உலகத்தாருக்கு உணர்த்திவிட்டு மறைந்தருளினார்.

இருடிகள் தங்கள் மனைவியர்கள் நிற்கும் நிலையைக் கண்டார்கள். அவர்கள் கற்பும், நாணமும் களைந்து போகச் செய்தவர் சோமசுந்தரக்கடவுள் என்பதை உணர்ந்த இருடிகள், அப்பெண்கள் மதுரையிற் வைசியப் பெண்களாகப் பிறக்கச் சாபமிட்டார்கள். அதற்கு அவர்கள், எங்கள் சாபம் எப்போது நீங்குமெனக் கேட்டார்கள். அங்கு அரசாளும் சோமசுந்தரக்கடவுள் உங்கள் கைகளைத் தீண்டும்போது சாபம் நீங்கும் என அந்த இருடிகள் கூறினார்கள்.

அந்த இருடிப் பத்தினிகள் மதுரையில் வைசியப் பெண்களாய் பிறந்து வளர்ந்து பெதும்பைப் பருவம் அடைந்தபோது சிவபெருமான், வளையல் விற்கும் வணிகவேடம் கொண்டு வைசியவீதியில் வளையலுக்கு விலைகூறிக்கொண்டு எழுந்தருளினார். உடனே அந்த வைசியப் பெண்கள் வீதியிற் புறப்பட்டு வந்து வணிகரின் பேரழைகைக் கண்டு காமத்தினால் மயங்கி வணிகரைச் சூழ்ந்து, தங்கள் கரங்களை நீட்டி வளையல் இடுவித்தார்கள். வளையலை இட்ட வணிகர் மறைந்தருளினார். மறைந்த வணிகன் எல்லோரும் காணத் திருக்கோயிலின் விமானத்து உள்ளொளியாகி திருவுருவாய்த் தோன்றினார். அதுகண்ட எல்லோரும் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தனர். சோமசுந்தரக்கடவுளால் கைகள் தீண்டப்பட்ட வைசியப் பெண்கள் கருவுற்று அளவில்லாத புதல்வர்களைப் பெற்றனர். அவர்கள் மிகவும் வலிமையுடையவர்களாகக் காணப்பட்டனர். வைசியப் பெண்கள் சிவபெருமானுடைய திருவருளைப் பெற்று சில காலம் வாழ்ந்து சிவலோகத்தை அடைந்தார்கள்.

## 33. அட்டமாசித்தி உபதேசித்த கதை

சிவபெருமான் திருக்கைலாசமலை ஆலமர நிழலில் இருந்தார். உமாதேவியார் சிவபெருமானின் தொடையில் இருந்து வெற்றிலை பாக்கு மடித்துக் கொடுத்தார். இதனால் சிவபெருமான் போக குருவாக வீற்றிருந்தார்.

அப்போது நந்தி, பிருங்கி முதலிய கணங்களும் சனகர் முதலிய நான்கு முனிவர்களுக்கும் சிவபெருமான் உபதேசித்தருளினார். அப்பொழுது முருகப்பெருமானுக்குப் பாலூட்டிய கார்த்திகைப் பெண்கள் அறுவரும் விபூதி உருத்திராட்சம் அணிந்தவராய் சிவபிரானை வணங்கி, எம்பெருமானே! அடியேங்களுக்கு அட்டமாசித்திகளை உபதேசித்தருள வேண்டுமென பிரார்த்தனை செய்தார்கள்.

அதற்குச் சிவபெருமான், தமது மடியில் எழுந்தருளியிருக்கும் உமாதேவியாரை தமது திருக்கரத்தின் விரலால் சுட்டி, இப்பார்வதி எங்கும் நிறைந்த பராசக்தியாயும் மகேசுவரியாயும் உள்ளவள். அணிமா முதலிய அட்டமா சித்திகளையும் தமக்குத் தோழிகளாயுள்ளவள். அவைகள் இவளைச் சூழ்ந்து குற்றேவல் செய்பவர். இவளை நீங்கள் சிந்தித்துத் தியானம் செய்தால் இவள் உங்களுக்கு அட்டாமா சித்திகளையும் அருள்வாள் என்று திருவாய் மலர்ந்தருளி எட்டுச்சித்திகளையும் கார்த்திகைப் பெண்களாகிய இயக்கியர்க்கு உபதேசித்தருளினார். அவர்கள் முன்செய்த ஊழ் வினையால் அவற்றை மறந்தார்கள். அதனால் சிவபெருமான் அவர்களைக் கோபித்து நீங்கள் பட்ட மங்கையென்னும் தலத்தில் ஆலமரத்தடியில் கருங்கல்லாய்க் கிடக்க கடவீர்கள் எனச் சபித்தருளினார். இயக்கியர் மனம் தளர்ந்து எப்போது சாபவிமோசனம் நீங்கும் என்று கேட்டபோது நீங்கள் கருங்கல்லாகி ஆயிரம் வருடங்கள் சென்றபின் நாம் மதுரையின் நின்று அவ்விடம் வந்து உங்களுக்குச் சாபவிமோசனம் அருளுவோம். பின்னர் உங்களுக்குப் பழைய உருவம் தந்து எட்டுச் சித்திகளும் உபதேசம் செய்வோமென்று திருவாய் மலர்ந்தருளினார்.

இயக்கியர் அறுவரும் பட்ட மங்கையிலுள்ள ஆலமரத்தினடியிலே கருங்கல்லாகக் கிடந்தார்கள். ஆயிரம் வருடம் சென்றது சிவபெருமான் ஆசிரிய வடிவம் கொண்டு எழுந்தருளி அக்கருங்கற்களில் திருநோக்கம் செய்தார். உடனே இயக்கிமார்கள் முன்புள்ள வடிவம் கொண்டெழுந்தார்கள். அவ்வாசிரியரை வீழ்ந்து வணங்கினார்கள். ஆசிரியர் அவர்களின் சிரசில் தமது திருக்கையை வைத்து அட்டமாசித்திகளையும் உபதேசிக்கத் தொடங்கினார்.

அட்டமாசித்திகளாவன, அணிமா, மகிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பனவாகும். அவற்றுள் அணிமா என்பது மிகச் சிறிய உயிர்கள் தோறும் தான் பரமாணுவாய்ச் சென்றிருக்கும் சிறுமையாம். மகிமா என்பது பிருதுவி முதல் சிவதத்துவம் ஈறாக உள்ள முப்பத்தாறு தத்துவங்களின் உள்ளும் புறமும் நிறைந்திருக்கும் பெருமையாம். லகிமா என்பது, மேருபோன்று பாரமாய் இருப்பது யோகி எடுத்தால் இலகுவாய் இருக்கும். கரிமா என்பது அணுவைப்போல இலகுவாய் இருப்பது. யோகியை எடுத்தால் மேரு மலை போலப் பாரமாயிருக்குமாம். பிரப்தி என்பது பாதாளத்தினின்றும் பிரமலோகத்திற் புகுவதும் பிரமலோகத்திலிருந்து பாதாளலோகத்திற் புகுவதுமாகும். பிரகாமியமாவது; பரகாயத்திற் பிரவேசித்தலும், ஆகாயத்தில் இயங்குவதும் தான் இச்சித்த போகமனத்தையும் தானிருக்குமிடத்தில் வருவித்தலுமாம் ஆகாயத்திலுள்ள சூரியனதுடம்புள் வெய்யிலினால் எல்லாம் விளங்குதல்போல மண்ணுலகத்துப் பொருள்களையும் விண்ணுலகத்துப் பொருள்களையும் முக்காலங்களையும் தன் சரீரத்தினொளியால் அறிவதுமாகும். ஈசத்துவமாவது முத்தொழில்களையும் தன்னிச்சைப்படி செய்து சூரியன் முதலிய கிரகங்கள் தன்னேவல் கேட்ப வாழ்தலாம். வசித்துவமாவது இந்திரன், தேவர், அசுரர், முனிவர், பூதங்கள் போன்றவற்றை தம்வசமாக்குதல். நம்மையறிந்த யோகிகள் இச்சித்திகளை விரும்பாவிடினும் அவை அவர்களை நிழல்போல் அடைந்து அவர்கட்கு பெருமையும் புகழும் அளிப்பதாகும் என உபதேசம் செய்தார் சிவபெருமான்.

அது கேட்ட இயக்கிமார்கள் உமாதேவியைத் தியானிக்கும் தியானத்தினால் அச்சித்திகளை நன்கு பயின்று ஆகாயவழிச்சென்று திருக்கைலாயத்தை அடைந்தார்கள்.

# சிவராத்திரி விரதத்தின் மகிமை

**சிவத்தமிழ்ச்செல்வி தங்கம்மா அப்பாகுட்டி, J. P அவர்கள்**

சிவனுக்கு உகந்த இராத்திரி சிவராத்திரி. சைவ மக்கள் மேற்கொள்ளும் விரதங்களில் முதன்மையானது சிவராத்திரி விரதமாகும். மாசி மாதத்தில் அமாவாசையை நினைவூட்டுகின்ற விரதம் இதுவாகும். அமாவாசைக்கு முதல்நாள் சதுர்த்தசி தினம் இவ்விரதத்தை சைவ மக்கள் மேற்கொள்கிறார்கள். அம்பிகைக்கு ஒன்பது இரவுகள், சிவனுக்கு ஒரு இரவு சிறப்பாக விரதம் மேற்கொள்வதற்கு உரிய நாட்களாகும். சைவசமய வழிபாடுகளில் சிவராத்திரி வழிபாடும் ஒன்று. சைவ சமயத்தினருக்கு இது பெரும் சிறப்பானது. பன்னெடுங் காலமாக நம் நாட்டில் மேற்கொள்ளப்பட்டு வரும் சிறந்த வழிபாடுகளில் ஒன்று சிவராத்திரி வழிபாடு என்பதை யாவரும் ஒப்புக்கொள்வர்.

தெய்வம் ஒன்று என்றாலும் தெய்வ பேதங்கள் பல உள்ளன போன்று விரதங்களும் பலவாயின. சிவபெருமானுக்கு உரிய விரதங்கள் எட்டு அவற்றுள் சிவராத்திரி வழிபாடு மிகவும் சிறப்பு மிக்கது.

சிவத்துடன் சம்மந்தப்படுத்தும் இராத்திரி சிவராத்திரி எனச் சொல்லப்படுகின்றது. சிவபெருமானுக்குரிய எண்ணாயிரம் கோடி நாமங்களில் தலைசிறந்தது சிவன் என்னும் நாமமாகும். சிவன் என்னும் சொல்லுக்கு பேரின்பத்திற்குக் காரணன், தூயதன்மையன் என்னும் பொருள் காண்கின்றனர் ஆன்றோர்.

புற இருளைப் போக்கிக்கொள்வதற்குச் சூரியன் ஒளி உதவுவதுபோல அக இருளைப் போக்கிக்கொள்வதற்கு நமக்கு உதவுவது சிவ ஒளியேயாகும். சிவவழிபாடு செய்வதால் முற்பிறவிகளில் செய்த வினைகள் இப்பிறவியில் அழிந்துவிடும். சிவராத்திரியன்று உபவாசம் இருக்கவேண்டும். உபவாசம் என்பதற்கு உப (இறைவனுக்கு) அருகில், வாசம் - வசித்தல் என்பது பொருளாகும். இறைவனைத் தியானிப்பதிலே இருத்தல் என்று இதற்கு ஆன்றோர்களில் சிலர் பொருள் காண்கின்றனர்.

**விரதம் மேற்கொள்ளும் முறை:**

விரத தினத்திற்கு முன்னாலே ஒருபோது உண்டு இரவில் தரையில் நித்திரைசெய்து விரதத்தன்று விடியற் காலையில் எழுந்து நீராடி சிவாலயம் சென்று சிவனை வழிபட்டுத் திரும்பவேண்டும். வீட்டில் சிவபூசை செய்யும் இடத்தை பசுஞ் சாணத்தால் மெழுகி பச்சை அரிசி மாவினால் கோலமிட்டு வாழை, மாவிலை முதலியவற்றால் அலங்கரிக்க வேண்டும். பகலிலேயே இரவுப் பூசைக்கு வேண்டிய பொருட்களைச் சேகரித்து வைத்துக்கொள்ள வேண்டும். மாலையில் அலங்கரிக்கப்பெற்றுள்ள மண்டபத்தில் உயர்ந்த ஆசனத்தில் சிவபெருமானை எழுந்தருளச்செய்து நான்கு ஜாமங்களிலும் விதிப்படி பக்தி சிரத்தையுடன் சிவபூசை செய்ய வேண்டும். சிவபூசை செய்யத் தெரியாதோர் உபவாசம் இருந்து நான்கு ஜாம பூசைகளையும் தரிசித்து பயன்பெற வேண்டும். நித்திரை விழித்திருத்தல் என்பது மனம், வாக்கு, காயம் மூன்றையும் ஒன்றுபடுத்தி சிவதியானத்தில் இருத்தலாகும். இதற்குமாறாகப் புலன்களை கலைய விடுகின்ற நிகழ்வுகளில் இடம்பெறுதல் தவிர்க்கப்படல் வேண்டும். முழு இரவும் விழித்திருக்க இயலாதவர்கள் லிங்கோற்பவ காலம் மட்டும் தமது நியமத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம்.

ஆகவே சிவராத்திரி விரத்தின் மகிமையை உணர்ந்து அனுட்டிப்பதோடு மறுநாட் காலை பாரணம் செய்வதோடு ஏனையோரையும் தான தர்மத்தால் மகிழ்விக்க வேண்டும்.

# திவ்வியப் பிரபந்தத்திற் திருத்தாண்டகம்

திரு. முருகவேபரமநாதன் அவர்கள்

பன்னியசெந் தமிழறியேன் கவியேன் மாட்டே
னென்னோடு பண்ணிறந்த கலைகளாய
தன்னை யுந்தன் றிறத்தறியாப் பொறியிலேனைத்
தன்றிறமு மறிவித்து நெறியுங்காட்டி
யன்னையையு மத்தனையும் போலவன்பா
யடைந்தேனைத் தொடந்தென்னை யாளாக்கொண்டே
தென்னெறும்பி யூர்மலைமேன் மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேனானே.

**பதிகக் குறிப்பு:-** பன்னிய செந்தமிழ் அறியேன், என்னையும் தொடர்ந்து ஆட்கொண்டவர், பளிங்கின் நிழலுட்பதித்தசோதி என்றன் மனத்திருந்த கருத்து, கார்முகிலாய்ப் பொழிவார், பொழிந்த முந்நீர் சுரப்பார், என்றிவ்வாறு பலவுமாய் அறியப்படுகின்ற எறும்பியூர்மலைமேல், மாணிக்கநாதரை நான் சென்றடையப் பெற்றேன்.

மன்னிய - இவர் முதல்வராய் இருந்தருளிய கவியேன் மாட்டேன், கவி என்னால் இயன்ற வல்லனல்லன், அன்னையும் அத்தனையும் போலத் தொடர்ந்து ஆட்கொண்ட தன்திறமும் - தலைவனாகிய தனது இயல்பினையும், நெறிகாட்டுதல் - உயிர்கள் பாசநீங்கித் தன்னையடைய வழி காட்டுதல், ஞானந்தருதல் - ஆளாக்குதல் பயன், மாணிக்கம் - தலத்துச்சுவாமியின் பெயர், எறும்பியூர் மலை - எறும்பியூரில் உள்ள சிறு மலை. சோதிபதித்தல் - இறைவன் செயல்.

**திருத்தொண்டர் புராணம் 21, திருநாவுக்கரசுநாயனார் புராணம்**
**C.K. சுப்பிரமணிய முதலியார் உரை. பக் 514, 515.**

**இப்பகுதியை இவ்வாக்கத்தின் முன்னுரையாய்க் கொண்டு எடுத்தபொருள் பற்றிச் சிந்திப்போம்:**

திவ்வியப்பிரபந்தம் திருமால் தோத்திரம். பன்னிரு ஆழ்வார்கள் அருளிச் செயலின் தொகுப்பு - பிரபந்தம், பக்திநூல், பாசுரம், கவிதை, பாக்கள். திருமுறை பதினொன்றில் ஆலவாயான்திருமடல் திருமுகப் பாசுரம் என வழங்குகிறது ஒப்பிடத்தக்கது. "திவ்வியம் பழுத்த சைவம்" என்பது குமரகுருபரர் வாக்கு. திவ்வியம் - இனிமை, தித்திப்பு எனவே படிப்போர் கேட்போர் அனுபவிப்போர் உணர்வோர் யாவர்க்கும் அமிர்தம் போற் தித்திப்புடன். இறை இன்பத்தையும். இறைகலப்பையும் தரும் பெருமையுடையது இப்பிரபந்தம். இதைத் திருநாலாயிரம் என்றும் அழைப்பர். ஒட்டு மொத்தமாக நாலாயிரம் பாசுரங்கட்குச் சற்றுக் குறைந்த பாசுரங்களைக் கொண்டது இப்பிரபந்தம். இதைக்கண்ட இடங்களிலும் சபையிலும் அமங்களமான காரியங்களிலும் பாராயணம் பண்ணுவதில்லை. இன்ன இன்ன ஷேத்திரங்களில் இன்ன இன்ன பத்துக்கள் பதிகங்கள்தான் பாடலாம் என்ற சட்டதிட்டம் இதற்கு. தாண்டகம் என்பது ஒருவகைப் பாலினம். இதிற் குறுந்தாண்டகம் என்பது ஒருவகைபபாலினம். இதிற் குறுந்தாண்டகம் நெடுந்தாண்டகம் என இருவகையுண்டு. அறுசீர்களைக் கொண்ட ஒரே அளவான நான்கு அடிகளால் ஆகியது குறுந்தாண்டகம். இதில் ஒவ்வோர் அடிதோறும் மெய்யெழுத்துக்கள் உட்படப் பதினைந்து எழுத்துக்களுக்கு குறையாமலும் இருபத்து நான்கு எழுத்துக்களுக்கு மேற்படாமலும் இருக்கும். நெடுந்தாண்டகம், எண்சீரகொண்ட எட்டு அடிகளாய் அமைவது. திருமுறைகளில் நெடுந்தாண்டக யாப்பு அமைந்த இசைச்செய்யுள் வடிவத்தைக்

கொண்டுவந்தவர் திருநாசுக்கரசு சுவாமிகள். பிரபந்தத்திலே இதைச்சிறந்த பாவினமாக்கியவர் காலுகஷிப்பெருமாளெனப் போற்றப்படும் பாவேந்தர் திருமங்கையாழ்வார் மருணீக்கியார் எனும் இயற்பெயர் கொண்ட அப்பரடிகள் பாவடிவை ஆக்கியமையால் அவருக்குத் தாண்டகவேந்தர், தாண்டகசதுரர் என்ற திருநாமங்கள் வழங்கப்பட்டமை பெரியபுராண வாயிலாகக் காணலாம்.

**பொய்கைசூழ் பூம்புகலூர்ப் புனிதர் மலர்த் தாள்வணங்கி**
**நையுமனம் மரீவினொடு நாடொறுந் திருமுன்றிற்**
**கைகலந்த திருத்தொண்டு செய்து பெருங்காதலுடன்**
**வைகுநாளெண்ணிறந்த வண்டமிழ் மாலைகள் புனைந்தார்.**

**பெரியபுராணம் - 1678.**

**நின்ற திருத்தாண்டகமு நீடுதனித்தாண்டகமும்**
**மன்றுறைவார் வாழ்பதிகள் வழுத்து திருத்தாண்டகமும்**
**கொன்றை மலர்ச்சடையார் பாற் குடைந்தடைந்த நேரிசையுந்**
**துன்றுதனி நேரிசையு முதலான கொடுத்தமைந்தார்**

**மேலது - 1679**

**ஆருயிரின் திருவிருத்தந் தசபுராணத் தடைவும்**
**பார்பரவும் பாவநாசப் பதிகம் பன்முறையும்**
**நேர்பட நின்று அறை கூவுந்திருப்பதிகமுதற் பிறவும்**
**பேரருளின் கடலளிக்கும் பெருமானைப் பாடினார்**

**மேலது 1680**

தாண்டகம் என்கின்ற செய்யுள் நடை (வடிவம்) மட்டுமன்றி நின்ற திருத்தாண்டகம், தனிதாண்டகம், திருத்தாண்டகம், (நடராஜன் பற்றி நேரிசையும், தனிநேரிசையும், திருவிருத்தமும், தசபுராணதடைவும், பாவநாசப்பதிகமும் பாடினார். தசபுராணத்தடைவு:சிவமாகபுராணங்கள் பத்தின் ஒவ்வொரு புராணக்கருத்தும்) ஒவ்வொரு பாட்டின் கருத்தாகச் செறிந்து விளங்குதலின் இப்பெயர் பெற்றது.

பார்பரவும் பாவநாசப்பதிகம்: "என்னெம்மான் என்பார் பாவநாசம்" என்று முடிந்தருளிய, இப்பதிகம் பயன் பெறும் பொருட்டு, உலகம் பயிலத்தக்க தென்பது கருத்து.

நேர்பட நின்று பன்முறையும் அறைகூவுந்திருப்பதிகம்: இது "சாக்கறை விருத்தம்" என வழங்கும் பதிகம் என்பார். என் விண்ணப்பம் என்தனி நெஞ்சம் சாக்கறையோ என்று பாட்டுத்தோறும் கூவியதாக வருவதால் அறை கூவும் என்றார். பன்முறையும் பதினொரு பாட்டுகளிலும்.

C.K. சுப்பிரமணிய முதலியார் உரை. பக்கம் 999

மறுமாற்றத்தாண்டகம், நின்றதாண்டகம், புக்கதாண்டகம், நெடுந்தாண்டகம், குறுந்தாண்டகம், சிந்தை பிரியாப்பெருதாண்டகம், (பெரியதிருத்தாண்டகம்) எனப்பல செய்யுள் நடைகளைப் பொழிந்தவர் அப்பர் பெருமான். இவரது இவ்வமைப்பு 981 பாடல்களைக்கொண்ட 99 பதிகங்கள் ஆறாம் திருமுறையாகத் தனியே வகுக்கப்பட்டது. சிந்தைபிரியாப் பெருந்தாண்டகம் எனப் ஏன் வந்தது எனின் அடியவர்கள் எப்போதும் மனத்துள் வைத்துப் போற்றுந்தன்மை உடையதாதலின் பெரிய திருத்தாண்டகம் எனப்படும் பதிகம் அடையாளத் திருத்தாண்டகம், திருவடித்திருத்தாண்டகம், போற்றித்திருத்தாண்டகம் என்று ஒவ்வோர் காரணத்தால் பெயர் போந்த திருப்பதிகங்கள்போல இத்திருப்பதிகம் பெரிய திருத்தாண்டகம் எனப்பெயர் பெற்றது. இவ்வரிசையில் இப்பாடல் சிந்தைபரியாய் பெருந்தாண்டகமாம்

அரியானை யந்தணர்தஞ் சிந்தையானை
யருமறையி னகத்தானை யனுவை யார்க்குந்
தெரியாத தத்துவனைத் தேனைப்பாலைத்
திகழொளியைத் தேவர்க டங்கோனை மற்றைக்
கரியானை நான்முகனை கனலைக்காற்றைக்
கனைகடலைக் குலவரையையைச் கலந்துநின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே

கரி - திருமால், கனல் - தீ, நெருப்பு.

திருநாவுக்கரசு சுவாமிகளின் பதிக அமைப்பிற் பாசுரங்கள் வடித்தவர் திருமங்கை ஆழ்வார். அப்பாசுரங்களும் திருக்குறுந்தாண்டகம் (20 பாசுரங்கள்) திருநெடுந்தாண்டகம் (30 பாசுரங்கள்) என அழைக்கப்பெற்றன. அப்பரின் சிந்தை பிரியாப் பெருந்தாண்டக வடிவில் அமைந்த ஆழ்வார் பாசுரமொன்று இது.

முளைக்கதிரை குறுங்குடியுள் முகிலை மூவா
மூவுலகும் கடந்தப்பால் முதலாய் நின்ற,
அளப்பரிய ஆரமுதை அரங்கம் மேய
அந்தணனை அந்தணர்தம் சிந்தையானை,
விளக்கொளியை மரகதத்தைத்திருத்தண்காவில்
வெஃகாவில் திருமாலைப் பாடக்கேட்டு
வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருக என்று
மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே.

பாசுரம் – 14

குறுங்குடி-அரங்கம் (ஸ்ரீரங்கம்) திருத்தண்கா, திருவெ.'.கா திருமால் தலங்கள். தாய் தன் மகள் திருமால் புகழைக் கேட்கவே விரும்புகிறாள் எனப் பேசிய பாசுரம். கிளியிடம் வேண்டும் பாவனை.

இப்பாசுரங்களின் இனிமை, தமிழ், பாவம், தளை, அமைப்பு, கருத்தாழம், படிப்போரை உருக்கும் பாவம் சொல்லுந்தரமன்று. அப்பர்பிரானின் தாண்டகங்களைப் படிப்போர் உள்ளம் உருகி கண்மாரி பொழிந்து அலறிய கட்டங்களைப் பன்னிருதிருமுறை முற்றொதல் நடைபெறும்போது நானும் அழுத அனுபவங்கள் - சஹ்ருதய பாவமாகும். திருவாசகம்போலத் தாண்டகமும் மனதைக் கரைத்து பாடலுடன் ஒன்றிக்கச் செய்யும். இவ்வாறே முருகன் பேரில் எழுந்த திருப்போரூர்ச் சந்நிதி முறையும் (சிதம்பரசுவாமிகள் பாடியது) முருகதோத்திரங்களில் உயர்ந்த தரத்தில் அமைந்தது. அப்பர் திருவாக்கையும் மன்னன் மங்கையின் வாக்கையும் ஒப்பீட்டாய்வு செய்யும்போது அதுவும் மணிக்கவிதைகளே.

திருநாலாயிரத்தில் திருமங்கைஆழ்வார் அருளிச்செய்த திருநெடுந்தாண்டகத்தில் முதற் பத்துப்பாடல்கள் திருமால் தாமேயான பாவத்தில் அமைந்தன. இரண்டாவது பத்துப்பாசுரங்களும் தலைவியின் திருத்தாயார் கூற்றாகவும், மூன்றாம் பத்துப்பாடல்களும் தோழியுடன் பேசும் தலைமகள் வார்த்யைாகவும் வருகின்றன. எல்லாப் பாசுரங்களும் இங்கே எடுத்தாளப் பெருகும். எனவே சில சிந்தனைகளுக்கு விருந்தாகத் தரப்படுகின்றன.

## எந்தையின் திருவடிகள் என் தலைமேல் உள்ளன

மின்னுருவாய் முன்னுருவில் வேதம் நான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள் தானாய்
பின்னுருவாய் முன்னுருவில் பிணிமூப்பில்லாப்
பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணாது என்னும்
பொன்னுருவாய் மணியுருவில் பூதம் ஐந்தாய்ப்
புனல் உருவாய் அனலுருவில் திகழும் சோதி
தன்னுருவாய் என்னுருவில் நின்ற எந்தை
தளிர்புரையும் திருவடியென் தலைமேலவ்வே

ஸ்ரீமந்நாராயணன் எல்லாமாய் அமைந்து கரந்து நிற்கும் நிலைபேசி அவனது தளிர் பொற்பாதம் தன் தலைமேலவ்வே என்பதனால் அவன் திருவடி நீழலில் வதியும் பெருமையைப் பெற்ற ஆழ்வார் அதை விளக்க "தளிர்புரையும் திருவடி என் தலை மேலவ்வே" என்றார். காமர்புரையும் சேவடியல்லவா. மலரடி, மாணடி என வள்ளுவர் பேசுவர். மின்னல் போலப் பளிச்சிடும் திருமேனியையுடைய அவன் விளக்கொளியாய் மிளிர்கின்றன. நான்கு வேதங்களாயும், சந்திரனாயும் திகழ்கின்றான். இவனுக்கு பிணிமூப்பில்லை, பிறப்புமில்லை, இறப்புமில்லை இவனுக்கு பஞ்சபூதம் அவனே. என்னைத் தன்னாக்கி நின்ற என் தந்தையின் குளிர் பொற்பாதம் என்தலைமேலவ்வேயென ஆழ்வார் பாடிப் பரவசம் கொள்கிறார்.

## அடியார் மனம்தான் அரியின் ஆலயம்

நீரகத்தாய்! நெடுவரையின் உச்சி மேலாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்த கச்சி
ஊரகத்தாய் ஒண்துறைநீர் வெஃகாவுள்ளாய்
உள்ளுவார் உள்ளத்தாய் உலகமேத்தும்
காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்! கள்வா!
காமருபூங் காவிரியின் தென்பால் மன்னு
பேரகத்தாய்! பேரா தென் நெஞ்சினுள்ளாய்!
பெருமான் உன் திருவடியே பேணினேனே

பாசுரம் 8

திருநீர்மலை, திருமலை, நிலாத்திங்கள் நாண்மதிப் பெருமாள், கச்சிப்பதி, திருவெஃகா, காவிரியின் தென்கரைச் ஸ்ரீரெங்கம் எல்லாமேதிருமால் கோயில் கொண்டு அருள்பாலிக்கும் திவ்விய தேசங்கள். அங்கே மட்டுமன்றிப் பரமபதத்திலும், மழையிலும், மழைமுகிலும் கரந்து நிற்பவனும் கண்ணனே. யார் அவனை மனதிலே நினைக்கிறார்களோ அவர்கள் உள்ளத்திலே அவன் கோயில் கொண்டிருப்பான். அவன் என் மனதில் (பேராது) அசையாது வாழ்கின்றான் அவள் பொற்பதங்களைப் பேணிப் பாதுகாக்கின்றேனே எனமனம் உவந்து உகந்து பாசுரம் பண்ணியுள்ளார்.

அவனது எழிற்கோலமான வண்ணங்களைப்பேசி நீர் மலைமேல் வதிந்து வந்திப்போர்க்கு அருள்பாலிக்கும் இறைவனைக்கண்டு அனுபவிக்க விரும்புகிறாள் எனத்தாய் பேச்சாக அமையும் பாசுரம் இது,

கார்வண்ணம் திருமேனி கண்ணும் வாயும்
கைத்தலமும் அடியிணையும் கமலவண்ணம்
பார்வண்ண மடமங்கை பத்தர்பித்தர்
பனிமலர்மேல் பாவைக்குப் பாவம் செய்தேன்

ஏர்வண்ண என்பேதை என் சொல் கேளாள்
எம்பெருமான் திருவரங்க மெங்கேயென்னும்
நீர்வண்ண நீர்மலைக்கே போவேன் என்றும்
இதுவன்றோ நிறையழிந்தார் நிற்குமாறே

பாட்டு – 18

இப்பாசுர வர்ணனை றொம்பப் பிரமாதம். நீலமேகச்சியாமள வண்ணன் அவன் திருக்கரங்களும் திருப்பாதங்களும் செந்தாமரை வண்ணம். இ'.தேபோல எம்பெருமான் வண்ணமெல்லாம் தாமரையே வடிவமெல்லாம் தாமரையே

மைவண்ண நறுங்குஞ்சி சிழல்பின்தாழ
மகரம்சேர் குழையிருப்பா டிலங்கியாட
எய்வண்ண வெஞ்சிலையே துணையா இங்கே
இருவராய் வந்தாரென் முன்னே நின்றார்
கைவண்ணம் தாமரைவாய் கமலம் போலும்
கண்ணிணையும் அரவிந்தம் அடியும் அஃதே
அவ்வண்ணத் தவர் நிலைமை கண்டும் தோழீ
அவரைநாம் தேவரென் றஞ்சினோம்

பாடல் – 21

தோழீ! நாம் என் கண்ணனைக் கண்டஞ்சிறோமே என்கின்றாள் தலைவி. குறுந்தாண்டகம் இருபதுமே இணையில்லாப் பாடல்கள் புனிதமான நல்ல கருத்தைத் தாங்கி வருகின்றன.

காவியை வென்ற கண்ணார்
கலவியே கருதி நாளும்
பாவியே னாக வெண்ணி
அதனுள்ளே பழுத்தொழிந்தேன்
தூவிசேர் அன்னம் மன்னும்
சூழ்புனல் குடந்தையானை
பாவியேன் பாவியாது
பாவியே னாயி னேனே!

திருக்குறுந்தாண்டகம் – 14

செழுங்கழுநீரை வென்ற கண்களுடைய பெண்களின் பால் உணர்வையே மனத்தால் எண்ணி எண்ணி ஒவ்வொரு தினமும் பாவம் செய்தவனாகி மீண்டும் மீண்டும் காம விவகாரத்தால் உடல் நோய்வாய்ப்பட்டேன். இப்படி என் தேகத்தை வீணாக்கிய நான் குடந்தையிலே இருக்கும் ஆராவமுதனை பாவித்துத் தொழுது வணங்காமல் விட்டமையால் நான் நல்ல பெயரை இழந்து பாவியென்று பலராலும் இகழப்பட்டேனென்று துன்புறும் ஒரு சிந்தனைமிக்க கருத்து இப்பாடலிற் தொனிக்கிறது. இ'.தே போல இன்னொரு பாடலைப் பார்ப்போம்.

தாவியென் றுலக மெல்லாம்
தலைவிளாக் கொண்ட எந்தாய்
சேவியேன் உன்னையல்லால்
சிக்கெனச் செங்கண் மாவே
ஆவியே! அமுதே என்றன்
அருயி ரனைய எந்தாய்
பாவியேன் உன்னை யல்லால்
பாவியேன் பாவியேனே!

திருமலை 35 (906)

எனவே பக்திப் பிரபந்தப் பாதையில் பாவேந்தரும் நாவேந்தரும் சந்தித்த பாடல்களைப் படித்துப்பயன் பெறுவோமாக.

# மகாசிவராத்திரி வரலாறு

சித்தாந்த வித்தகர்
கயப்பாக்கம், திரு. சோமசுந்தரம் செட்டியார்

எல்லாம் வல்ல இறைவன் உயிர்களாகிய நாம் உய்யும் பொருட்டு வேதம், சிவாகமம், சாத்திரங்கள் முதலியவற்றை அருளிச்செய்துள்ளான். அவற்றுள் விதித்தவற்றை மக்களாகிய நாம் செய்தல் வேண்டும். விலக்கியவற்றை நீக்கல் வேண்டும். இங்ஙனம் பரமேசுவரனால் விதிக்கப்பட்டவற்றுள் ஒன்று சிவ்விரதங்களை அனுட்டித்தல் என்பதாகும்.

சிவவிரதங்கள் எட்டு என்று உபதேசகாண்டம் கூறும். இவற்றுள் மேலானது சிவராத்திரி ஆகும்.

"மணிநவ நிதியம் பூக்கும்
மாசிலாத் தெருளுண் டாக்கும்
அணிசிவ கருமந் தேக்கும்
அட்ட ஜசுவரியங் காக்கும்
பணிபுனை சுந்த ரேசர்
பயிலு நோன்பு எவைக்கு மேலாம்
திணிதிருத் தவத்தின் முன்னாஞ்
சிவநிசி யென்னு மாதோ"

**இதன் வரலாறு இருவகைப்படும்**

1. ஒரு கற்பத்தின் முடிவுக்காலம். அப்போது சிவபெருமான் பிரளயத்தை உண்டாக்கினார் அதனால் உலகம் அழிந்தது. பிரமன் முதல் எறும்பு ஈறாகவுள்ள எல்லா உயிர்களும் ஒடுங்கிக்கிடந்தன. எங்கும் இருள். (கங்குல்) எஞ்சி நின்றவர் சிவபெருமானும் அவரைவிட்டு என்றும் நீங்காது விளங்கும் உமாதேவியாருமாம். அந்த இரவில் 4 ஜாமங்களிலும் உயிர்கள் உய்திபெற உமாதேவியார் சிவபிரானை விதிப்படி பூசித்தார். மீண்டும் உலக சிருட்டி ஏற்பட்டது. இது விடியற்காலம். அதுசமயம் உமாதேவியார் இறைவனை வணங்கி நின்று அவ்விரவைச் "சிவராத்திரி" யாகச் கொள்ளுமாறு வேண்டினார். மேலும் அந்நாளில் இறைவனை விதிப்படி பத்தி சிரத்தையுடன் பூசிக்கும் உயிர்களுக்கு எல்லாவிதமான நன்மைகளையும் அருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். இதுவே சிவராத்திரியின் ஒரு வரலாறு.

2 மற்றொரு வரலாறு

ஒரு கற்பத்தின் முடிவில் ஒரு பிரளயம் வந்தது. உலகம் நீருள் மூழ்கியது. உயிர்கள் வருந்தின. திருமால் பன்றியுருக்கொண்டு நீரில் மூழ்கித் தன் மூக்கினால் உலகை வெளியே கொண்டுவந்து சேர்த்தார். மக்கள் மகிழ்ச்சியடைந்தனர். திருமால் செருக்குக் கொண்டார். பிரமனும் செருக்கு கொண்டார். தங்களுக்குள் யார் பெரியவர் என்ற வாதம் ஏற்பட்டது. வார்த்தைகள் முற்றி இருவருக்கும் போர் மூண்டது. மக்கள் வருந்தினர். இப்போரை விலக்கச் சிவபெருமான் அக்னித் தம்பமாக நடுவில் தோன்றி இருவரையும் பிரித்தார். திருமால் பன்றியுருக்கொண்டு அச்சோதியில் அடியைச்தேடச் சென்றார். காணமுடியவில்லை. பிரமனும் அன்னவடிவங் கொண்டு சோதியின்முடியைக்காண மேலே பறந்து சென்றார். காணமுடியவில்லை. இருவரும் மீண்டனர். செருக்கு நீங்கியது. இறைவனும் அவர்பால் இரங்கிக் காட்சியளித்தனர். இதற்கு "இலிங்கோற்பவர்" என்று பெயர். இருவரும் சிவனைத் துதித்துப் பேறுபெற்றனர். இந்தநாளே சிவராத்திரி என்றுகந்த புராணம் தட்சகாண்டம் அடிமுடி படலத்தில் பின்வருமாறு கூறப்பட்டது.

(பிரமதேவன் தட்சனுக்குக் கூறியது)

"அரியும் யானும் முன்
தேடுமவ் வனற்கிரி யனல
கிரியெ னும்படி நின்றதால்
அவ்வொளி கிளர்ந்த
இரவ தேசிவ ராத்திரி
யாயினது இறைவற்
பரவி யுய்ந்தனர் அன்னதோர்
வைகலிற் பலரும்"

**விரதத்தை அநுட்டிக்கும் முறை:**

சிவராத்திரி தினத்திற்கு முன் தினமே சிவபூசைக்கு வேண்டிய உபகரணங்களைச் சேகரித்து வைத்துக் கொண்டு, விரத தினத்தன்று காலையில் எழுந்து நீராடி நித்திய கடன்களை முடித்துக்கொண்டு சிவாலயத்துக்குச் சென்று பெருமானை வழிபட்டு அவன்புகழ் கூறும் அருட்பாக்களைப் பாடி அவன் வரலாறு கூறும் புராணங்களைப் படித்து உண்டியின்றி இருத்தல் வேண்டும். பின்பு மாலையிலும் நீராடிச் சிவபூசை ஏற்றுக் கொண்டவர்கள் 4 ஜாமங்களிலும் விதிப்படிச் சிவபூசை செய்தல் வேண்டும். சிவபூசையில்லாதவர்கள் சிவாலயத்துக்குச் சென்று சிவபெருமான் அபிஷேகம், அலங்காரம், நிவேதனம் முதலியவற்றிக்கு வேண்டிய பொருள்களைச் கொடுத்து உறக்கமின்றி 4 ஜாமங்களிலும் பெருமானை வணங்கி வழிபட்டு மறுநாள் விடியற்காலையிலும் நீராடி நித்தியகடன்களை முடித்துக் கொண்டு அடியார்களுடன் பாரணம் செய்தல் வேண்டும்.

**சிவராத்திரி ஐவகைப்படும்:**

1. மாக சிவராத்திரி அல்லது "மகாசிவராத்திரி" (மாசி மாதத்தில் வரும் தேய்பிறைச் சதுர்த்தசி கூடிய நாள்.)
2. யோக சிவராத்திரி
3. நித்திய சிவராத்திரி
4. பட்ச சிவராத்திரி
5. மாத சிவராத்திரி - இவற்றின் விளக்கங்களை விரிந்த நூலில் கண்டுகொள்க.

**4 ஜாமங்களிலும் செய்யவேண்டிய முறை:**

எல்லா உபகரணங்கள் கூடிய அபிஷேகம், அலங்காரம், நிவேதனம் முதலியன வழக்கம்போல சிவாகமங்களில் விதிப்படி செய்தல், இவையன்றிச் சிறப்பாகவும், தவறாமலும் செய்ய வேண்டிய முறைகளைப் பின் குறித்துள்ளேன்.

| காலம் | அபிஷேகம் | அலங்காரம் | அர்ச்சனை | நிவேதனம் | தோத்திரம் |
|---|---|---|---|---|---|
| 1-ஜாமம் | பஞ்சகௌவ்யம் அகில் | வில்வம் | தாமரை | பொங்கல் | ருக்வேதம் |
| 2-ஜாமம் | பஞ்சாமிர்தம் சந்தனம் | தாமரை | துளசி | பாயாசம் | யஜுர்வேதம் |
| 3-ஜாமம் | தேன், பச்சை கர்ப்பூரம் | ஜாதிமல்லிகை | 3இதழ் கொண்ட வில்வம் | எள்ளன்னம் | சாமவேதம் |
| 4-ஜாமம் | கருப்பஞ்சாறு குங்குமப்பூ | நந்தியா வர்த்தம் | நீலோத்பலம் | சுத்தான்னம் | அதர்வண வேதம் |

குறிப்பு : நான்கு ஜாமங்களிலும் தேவாரம் முதல் பெரியபுராணம் ஈறாக உள்ள பன்னிரு திருமுறைப் பாடல்களை முறையாகச் சிரத்தையுடன் ஓதல் வேண்டும். இது இன்றியமையாத தோத்திரமாகும். இறைவனுக்கும் இதில் உவப்புண்டு என்பர் அறிஞர்.

**ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர்அவர்களின் 2ஆம் சைவ வினாவிடையிலே, விரதவியலில் சிவராத்திரி விரதத்தைப்பற்றிக் கூறப்பட்டவற்றையும் அறிந்து கொள்ளுதல் நன்மை பயக்கும். அது பின்வருமாறு,**

சிவராத்திரி விரதமாவது மாசிமாதத்துக் கிருஷ்ண பக்ஷ சதுர்த்தசி திதியிலே சிவபெருமானைக் குறித்து அனுட்டிக்கும் விரதமாகும். இதில் உபவாசஞ்செய்து, நான்கு ஜாமமும் நித்திரையின்றிச் சிவபூசை செய்தல் வேண்டும். நான்கு ஜாமப் பூசையும் அவ்வவ் காலத்திற் செய்வது உத்தமம், ஒரு காலத்தில் சேர்த்துச் செய்வது மத்திமம். பரார்த்தம், ஆன்மார்த்தம் என்னும் இரண்டினும், சிவராத்திரி நான்கு ஜாமப் பூசையிலே சூரிய தேவர் முதலிய பரிவாரங்களுக்குஞ் சோமாஸ்கந்தமூர்த்தி முதலிய மூர்த்திகளுக்கும் பூசை செய்ய வேண்டுவதில்லை. பரார்த்தத்திலே மகாலிங்க முதலிய மூல மூர்த்திகளுக்கும் ஆன்மார்க்கத்திலே மகாலிங்கத்திற்கு மாத்திரம் பூசை செய்யக் கடவர். பரார்த்தம் ஆன்மார்த்தம் என்னும் இரண்டிலும் விநாயகக் கடவுளுக்கு மாத்திரம் நான்கு ஜாமமும் பூசை செய்யலாம். சண்டேஸ்வர பூசை நான்கு ஜாமமும் செய்தல் வேண்டும். சிவபூசை இல்லாதவர் நித்திரை இன்றி ஸ்ரீ பஞ்சாட்சர செபமும் சிவபுராண சிரவணமுஞ் செய்து நான்கு ஜாமமும் சிவாலய தரிசனம் பண்ணல் வேண்டும். இதில் உபவாசம் உத்தமம், நீரேனும் பாலேனும் உண்பது மத்திமம். பழம் உண்பது அதமம். தோசை முதலிய பணிகாரம் உண்பது அதமாதமம். சிவராத்தரி தினத்திலே இராத்தரியிற் பதினான்கு நாழிகைக்கு மேல் ஒரு முகூர்த்தம் லிங்கோற்பவ காலம். நான்கு ஜாமமும் நித்திரை யொழிக்க இயலாதவர், லிங்கோற்பவ காலம் நீங்கும் வரையுமாயினும் நித்திரையொழித்தல் வேண்டும். இக்காலத்திலே சிவதரிசனஞ் செய்வது உத்தமோத்தம புண்ணியம். இச்சிவராத்திரி விரதம் சைவ சமயிகள் யாவராலும் ஆவசியகம் அனுட்டிக்கத்தக்கது.

திருச்சிற்றம்பலம்

சூல மேந்துவார் தோலுடை ஆடையர்
ஆல முண்டமு தேமிகத் தேக்குவார்
கால காலர் கடவூர் மயானத்தார்
மாலை மார்பர் பெருமான் அடிகளே.

திருச்சிற்றம்பலம்

– நன்றி : மில்க்வைற் முதல்வர்.

உ



# சைவ ஆலயங்களை வளம்படுத்திய பெருந்தகை திரு. தி. மகேஸ்வரன் அவர்கள்

காரைநகர் தொடக்கம் ஈழத்துத் திருக்கோயில்கள் அனைத்திலும் இடம்பெற்ற திருப்பணிகளில் முக்கிய பங்கு எடுத்துக்கொண்டவர் அமரர் திரு. தி. மகேஸ்வரன் அவர்கள் ஆவார். கொழும்பில் இருந்து தம் கப்பல் மூலம் யாழ்ப்பாணத்திற்கு தேங்காய் எண்ணை, அமுது அரிசி, கற்பூரம் ஆகிய பூசைப் பொருட்களை அனுப்பி வைத்து காலந்தவறாத பூசைக்கு உதவியாக இருந்தவர் இவர். ஈழத்துச் சிதம்பரத்திலும் ஆண்டிக்கேணி ஐயனார் கோயிலிலும் இப்பெரியார் ஆற்றிய திருப்பணிகள் பல. இவ்வாண்டு மார்கழித் திருவாதிரையில் ஆண்டிக்கேணி ஐயனார் பெருமானுக்கு சித்திரத்தேர் ஓடவைத்த பெருமை இவருக்குண்டு.

சிறப்பாக ஆண்டிக்கேணி ஐயனாருக்கு அழகான சித்திரத்தேர் அமைவதற்கு பெரும் பங்கெடுத்துக்கொண்டவர் இவர். தமது உள்ளத்தாலும் ஈட்டிய பொருள்களினாலும் சைவத் திருக்கோயில்களை வளம்படுத்திய இப்பெரியாரின் அகால மரணம் நெஞ்சை உருக்குகிறது. என்ன செய்வோம்! காலன் கணக்கறிந்து அழைத்துவிட்டான். அன்னாரின் ஆத்மா ஈழத்துச் சிதம்பர நடராசப் பெருமானின் குஞ்சித பாத நிழலில் என்றும் நிலைத்து நிற்கும் என்ற நம்பிக்கை எமக்கு உண்டு.

**கலாநிதி செல்வி தங்கம்மா அப்பாக்குட்டி, J.P**
தலைவர்

ஸ்ரீ துர்க்காதேவி தேவஸ்தானம்,
தெல்லிப்பழை.

பிரார்த்திக்கிறோம்



திருகோணமலை திருக்கோணேஸ்வரர் ஆலய
பரிபாலனசபைத்தலைவர்

## அமரர் முருகுப்பிள்ளை கோணாமலை செல்லராசா

(J.P.U.M சட்டத்தரணியும், பிரசித்த நொத்தரிசும்)

கோணேஸ்வரர் ஆலயத் திருப்பணியில்
அனவரதமும் உழைத்த அடியார் திருவடி போற்றி
அன்னாரது பிரிவு குறித்து
எமது பிரார்த்தனைகள்

கலாநிதி தங்கம்மா அப்பாக்குட்டி J.P
தலைவர்

நிர்வாகசபை
துர்காதேவி தேவஸ்தானம்
தெல்லிப்பளை

